Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 40 காசு

**பேச்சு**

மிகவும் தாறுமாறான பேச்சு, எழுத்தின்மூலம் கிடைக்கும் பலன்—கனவில் கண்ட கனி போல் விழித்துப் பார்த்தால் வாயில் நீர்தான் இருக்கும் - கனி இருக்காது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**ஒழுக்கம்**

ஒழுக்கம், நாணயம், உண்மை என்றஉயர்ந்த குணங்களெல்லாம் பொதுச்சொத்து.

-தந்தை பெரியார்

மலர்: 6 சென்னை 5 - 4 - 82 திங்கள் வெளியூர் 6 - 4 - 82 செவ்வாய் இதழ்: 166

## சட்டசபையில் பேசப்பட்ட விஷயம் குறித்து

## அறிக்கை வெளியிட்ட மாஜி ஐ.ஜி. மீது

# சட்டப்படி நடவடிக்கை

### முதல்வர் புரட்சித் தலைவர் அறிவிப்பு

### "வெளியே இருந்து சிலர் சொல்வதை அரசியலாக்கும் நிலைமை சிலருக்குத் தேவைப்படுகிறதே"

**சென்னை, ஏப். 5- குறிப்பிட்ட விஷயம் பற்றி சட்டசபையில் பேசப்பட்ட பின், அது குறித்து வெளியேயிருந்து அறிக்கை வெளியிட்ட முன்னாள் ஐ.ஜி. மீது அரசு மூலமாகவும், தனிப்பட்ட முறையிலும் தக்க நடவடிக்கை எடுக்கப்படும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.**

**வெளியே இருந்து சிலர் சொல்வதை அரசியலாக்கும் நிலைமை சிலருக்குத் தேவைப்படுகிறது எனக் கூறிய முதல்வர் புரட்சித் தலைவர் யார் குற்றவாளி? எப்படிக் குற்றம்சாட்டினார்கள் என்பது உண்மை வெளிவரும் போது தெரியும் என்றும் கூறினார்.**

சட்டமன்றத்தில் கேள்விநேரம் முடிந்ததும் தி. மு. க. துணைத் தலைவர் அன்பழகன் எழுந்து விசாரணைக் கமிஷன் முன்பு ஆர்.என். மாணிக்கம் என்பவர் கொடுத்திருந்த பிரமாணப் பத்திரத்திற்கு முதல்வர் சட்டமன்றத்தில் அளித்திருந்த பதில் மீது விவாதம் எப்போது நடைபெறும் என்று கேட்டார்.

இதன் மீது கருணாநிதி பேசுகையில் "ஆப்தி ரெக்கார்ட்" என்று கூறி கருத்துப் பரப்பப்பட்டதாகக் கூறினர்.

அதற்கு அவை முன்னவர் நாவலர் பதில் அளித்துக் கூறியதாவது:—

அலுவல் ஆய்வுக் குழு கூட்டப்பட்டுள்ளது. அதில் எல்லாக் கட்சித் தலைவர்களும் கூறுகிற கருத்துப்படி அவைத்தலைவர் முடிவு எடுப்பார். 11 மணிக்கு அலுவல் ஆய்வுக்குழு கூடுகிறது.

இவ்வாறு நாவலர் கூறினார்.

பின்னர் கருணாநிதி பேசும்போது விவாதம் நடைபெறுமா என்று கேட்டார்.

முதல்வர் புரட்சித் தலைவர்: 106-வது விதியின் கீழ் அறிக்கை வைக்கப்பட்ட அன்று நான் அவையில் இல்லை. ஒரு அறிக்கை சபையில் வைத்த பிறகு அதன் மீது விவாதம் நடைபெறக் கூடாது என்று விதி உள்ளது. அலுவல் ஆய்வுக்குழுவில் விவாதித்து புதிதாக ஒரு முடிவு எடுத்தால், அதனைச் சட்டமாக்க முற்படும் போது விதிமுறைகளையே மாற்றவேண்டி ஏற்படும்.

அன்பழகன்: விதிகளை மாற்றநேரிடும் என்றுமுதல்வர் கூறினார். விதிகளை மாற்றலாம். விவாதம் நடைபெறும் என்று ஏற்கனவே சட்டமன்றத்தில் அறிவிக்கப்பட்டுள்ளது என்று குறிப்பிட்டார்.

### அறிக்கை தந்தது ஏன்?

முதல்வர் புரட்சித் தலைவர்: ஒருசில கருத்துக்கள் முன்பு கூறப்பட்டதால் அதற்கு பதில் அளிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. காவல் துறை மானியக் கோரிக்கைவிவாதத்திற்கு பதில் அளித்து முதல்நாள் இரண்டரை மணி நேரம் பேசினேன். பல்வேறு ஆதாரங்களை வைத்து அப்போது பேச முற்பட்டேன். நேரம் இல்லை என்று அப்போதுஎல்லோரும் கூறினார்கள். நேரம் இல்லை என்பதால் சுருக்கமாகச் சொல்கிறேன் என்று நானும் சொல்லி முடித்தேன். நான் பதில் அளிக்கும் போதே இந்தப் பிரச்னையை கூறியிருந்தால் இப்போது அந்த விவகாரம் வந்திருக்காது. பிரமாணப்பத்திரம் பற்றி உறுப்பினர்கள் பேச மக்கள் மத்தியில் ஒரு தவறான கருத்துப்பரவி நாங்கள் பதில் கூறாது ஒதுங்குவதாக நினைக்கும் நிலை ஏற்படக் கூடாது என்று நாங்கள் அப்போது ஒரு அறிக்கை தந்தோம். சபை நடவடிக்கைகளை விதிமுறைகளை வைத்து நிர்ணயிக்கிறோம். அந்த விதிமுறையை அவ்வப்போது மாற்றப் போகிறோமோ என்பதுபிரச்சினையாகும்.

கருணாநிதி: அன்றைய தினம் அறிக்கை கொடுத்தது 106-வது விதியின் கீழாகும். பொது முக்கியத்துவம் வாய்ந்த பிரச்சினை என்பதால் அதனைப் பற்றி விவாதிக்க விதிமுறைகளில் இடம் உள்ளது.

சங்கரையா: அந்த அறிக்கை பற்றி விவாதம் நடத்த அரசுத் தரப்பில் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

சபாநாயகர்: அறிக்கைகள் வைப்பது பற்றி விதிமுறைகள் உள்ளன. 41-வது விதி 17-வது பிரிவின் படி ஒரு கமிஷன் நியமித்தால் அல்லது புலனாய்வுக்கு ஒரு விஷயத்தை விட்டிருந்தால் அதன் ஆய்வுக்குக் குந்தகம் இல்லாமல் நாம் பேச வேண்டும். வரம்புக்கு உட்பட்டு பேசுவதற்குத்தான் விதி உள்ளது. சபையில் உணர்ச்சி பூர்வமாக உறுப்பினர்கள் பேசக் கூடிய நிலை உள்ளது. கமிஷன் முன்பு உள்ள பிரச்னை பற்றி இங்கே நாம் பேசினாலும் அந்தப் பிரச்னைகுறித்து அவைத் தலைவர் எந்தத் தீர்ப்பினையும்வழங்கமுடியாது மேலும் விதிமுறையில் குறிப்பிட்டுள்ளபடி வரைமுறைக்கு உட்பட்டு பேசவேண்டும் என்ற விதிப்படிஇங்கே எவ்வாறு பேசமுடியும் என்றுதெரியவில்லை.

அன்றைய தினம் உணர்ச்சி வசப்பட்டு வாதப் பிரதிவாதங்கள் நடந்தன. எனவே 106-வது விதியின் கீழ் அறிக்கை வைக்கப்பட்டது. எனவே விவாதம் வைத்தாலும் வரம்புக்கு உட்பட்டு எப்படிப் பேச முடியும்?

கருணாநிதி:- அலுவல் ஆய்வுக்குழுவைக் கூட்டியிருப்பதாகச் சொன்னார்கள். அங்கே கருத்துக் கூறினாலும் எந்தப் பயனும் ஏற்படப்போவதில்லை என்று அறிகிறேன். விவாதமே நடத்தக்கூடாது என்று கூறிவிட்ட பின்னர் அலுவல் ஆய்வுக்குழுவைக் கூட்டி என்ன பயன்?

ஆண்டித்தேவர்:-இங்கே பேசப்பட்ட பிறகு கூட முன்னாள் ஐ. ஜி. பத்திரிகைகளுக்கு அறிக்கை வெளியிட்டிருக்கிறார். இப்படி அறிக்கை விடுகிற அவர்மீது என்ன நடவடிக்கை எடுக்கப்படும்?

### சட்டப்படி நடவடிக்கை

முதல்வர் புரட்சித் தலைவர்: சட்டப்படி தனிப்பட்ட முறையிலும், அரசு மூலமாகவும் அவர் மீது தக்க நடவடிக்கை எடுக்கப்படும். வெளியேயிருந்து ஒருவர் அறிக்கை வெளியிட்டுக் கொண்டிருக்கிறார். நாம் சட்டமன்றத்தில் பதில் சொல்கிறோம். எதிர்க்கட்சித்தலைவர் 'ஆப்தி ரெக்கார்டு'; என்று கூறி ஒரு கருத்தைச் சொன்னார். அதற்கு சபாநாயகர் தான்தீர்ப்புச் சொல்லவேண்டும். வெளியேயிருந்து சிலர் சொல்வதை அரசியலாக்கும் நிலைமை சிலருக்குத் தேவைப்படுகிறது. உண்மைவெளிவரும்போது யார் குற்றவாளி எப்படிக் குற்றம் சாட்டினார்கள் என்பதெல்லாம் தெளிவாகும். நாம் கூறும்பதில் தீர்ப்பு ஆகிவிடாது. நீதிமன்றம்தான் தீர்ப்பு அளிக்கும்.

### இயலாத காரியம்

சபாநாயகர்:— ஒரு விசாரணைக் கமிஷனில் அல்லது புலனாய்வில் உள்ள பிரச்சினை பற்றி விவாதம் நடத்த அனுமதிக்கக் கூடாது என்றும் விசாரணைக்குக் குந்தகம் வராது என்று பேரவைத்தலைவர் கருதினால் பேரவைத்தலைவரின் உசிதப்படி விவாதத்திற்கு அனுமதி அளிக்கலாம். இங்கே விவாதத்திற்கு அனுமதித்தால் உணர்ச்சி வசப்பட்டு எல்லைகடந்த வார்த்தைகள் வரும்போது அந்த நிலைமையைக் கட்டுப்படுத்துவது என்னால் இயலாத காரியமாகும்.

இங்கே நடக்கும் விவாதத்திற்கு தீர்ப்பு அளிக்கும் நிலையில் நான் இல்லை.

நெடுமாறன்: இந்தப் பிரச்னையை இங்கே விவாதிப்பதைத் தவிர்த்து அலுவல் ஆய்வுக்குழுவில் வைத்துவிவாதித்துமுடிவு செய்து இருக்கவேண்டும். சபை நேரம் மிச்சமாகி இருக்கும்.

சபாநாயகர்:— முன் வரிசைத் தலைவர்கள் எழுந்து பேசுகிறார்கள். தொடர்ந்து விவாதம் ஆகிவிடுகிறது. தலைவர்கள் பேச எழும்போது அதை அனுமதிப்பது என்று அலுவல் ஆய்வுக் குழுவில் முடிவு எடுத்து இருக்கிறோம்.

முதல்வர்:— இந்தப் பிரச்னை முதலில் கிளப்பப்பட்ட போது நான் வெளியே இருந்து கேட்டு கொண்டு தான் இருந்தான்.

அந்தப் பிரச்னையைக் கிளப்பி இப்போது பதில் சொல்ல வேண்டும் என்று சொன்னார்கள். இந்தப் பிரச்னை பற்றி காவல் துறை மானிய கோரிக்கை மீதான பதில் உரையின் போதே எதிர்க்கட்சியினர் பேசி இருக்கலாம்.

அதை விட்டு பின்னர் கேட்டதால் தான் 106-வது விதியின் கீழ் அறிக்கை கொடுத்தோம்.

இந்தப் பிரச்னையைக் கண்டு ஏதோ நான் அச்சப்படுவது போல ஒரு நிலைமையை ஏற்படுத்தாது இருக்கவே இந்த அறிக்கையை கொடுத்தேன்.

சட்டங்களை வைத்து 7 ஆண்டுகள் ஆட்சி செய்தவர்கள் இந்தப் பிரச்சினையைக் கூறியதைத் தொடர்ந்து விளக்கம் அளிக்கப்பட்டது.

இப்போது அலுவல் ஆய்வுக் குழுவைக் கூட்டி இந்த விதி முறைகளை மாற்றினால் எப்படிப் பொருத்தமாக இருக்கும்?

சபையில் வீணான சர்ச்சைகள் நடக்காது இருக்க சபாநாயகர் அதிக அக்கறை காட்டுவதால் ஆளும்கட்சியின் சலுகை குறைவாக உள்ளது. மற்றவர்கட்கு அதிகம் வழங்கப்படுகிறது.

### உண்மை வெளிவரும்

இதை நாங்கள் அனுபவிக்கிறோம்.

இப்படி சலுகை இல்லாத நிலையை வைத்து எங்கள் உறுப்பினர்களும் வேதனைப்படுகிறார்கள்.

நம் வீட்டுக் குழந்தையைப் பேசாமல் இரு என்று நாங்கள் சொல்லி வைத்து இருக்கிறோம்.

மூன்று நான்கு மாதங்களில் அந்த அறிக்கை பற்றி எல்லாம் உண்மைகள் வெளிவரும், அதுவரை அந்த அறிக்கை வேலை செய்யும்.

நீதிமன்றத்தில் ஆதாரங்களை வெளிப்படுத்தும் போது நாடு உண்மைகளை அறியும். அப்போது தான் எல்லாம் தெரியும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

இந்த விவாதத்தின் போது தி.மு.க, கம்யூனிஸ்டுகட்சிகள், முஸ்லிம் லீக் ஆகிய 4 கட்சிகள் வெளிநடப்பு செய்தன.

### விவசாய உயர்மட்ட குழுவுடன் முதல்வர் பேச்சு

சென்னை, ஏப். 5— விவசாய உயர்மட்ட குழுவினருடன் முதல்வர் புரட்சித்தலைவர் இன்று கோட்டையில் பேச்சுவார்த்தை நடத்தினார். கூட்டத்திற்கு குழுத் தலைவர் முனுஆதி தலைமைவகித்தார்.

### அமைச்சர் முத்துசாமி தகவல்

## சேதுசமுத்திரத் திட்டத்திற்கு மத்திய அரசிடம் வற்புறுத்தல்

**சென்னை, ஏப். 5- சேதுசமுத்திரத் திட்டத்தை நிறைவேற்ற மத்திய அரசிடம் கழக அரசு தொடர்ந்து வற்புறுத்தி வருகிறது என்று சட்டசபையில் அமைச்சர் முத்துசாமி கூறினார்.**

சேதுசமுத்திரத் திட்டத்தை உடனடியாக நிறைவேற்றக்கோரி சட்டசபையில் 1-மணி நேர விவாதம் நடந்தது.

இதற்கு பதிலளித்து அமைச்சர் முத்துசாமி கூறியதாவது.—

சேது சமுத்திரத் திட்டத்தை விரைவில் நிறைவேற்ற வேண்டும் என மத்திய அரசை வலியுறுத்தி வருகிறோம்.

இத்திட்டத்தை நிறைவேற்ற மதிப்பீடு ஆண்டுதோறும் உயர்ந்து கொண்டே போகிறது.

1860-ல் இத்திட்டத்தினை நிறைவேற்ற ரூ. 5 லட்சம் தேவைப்படும் என மதிப்பீடு செய்துள்ளனர்.

1965-ல் 31 கோடியே 50 லட்சம் செலவாகும் எனவும், 1974-ல்ரூ 65.50 கோடி தேவை என்றும், 1979-ல் 106 கோடி ரூபாய் தேவை எனவும், 1980-ல் ரூ. 110 கோடி தேவை எனவும் மதிப்பிட்டுள்ளார்கள்.

இத்திட்டத்தினை நிறைவேற்றினால் இதன் மூலம், 155 லட்சம் டன் பொருள்கள் எடுத்துச் செல்லமுடியும். கப்பல்கள் ஒவ்வொரு முறையும், செல்லும் தூரம் 305 மைல் தூரம் மிச்சப்படும். தூத்துக்குடி மற்றும் அதன் சுற்று வட்டாரம் வளர்ச்சி பெற சேது சமுத்திர திட்டம் செயல்படுத்தப் படவேண்டும். தூத்துக்குடி அனல்மின் நிலையத்திற்கு நிலக்கரி கொண்டு வருவதுஇத்திட்டத்தினால் 669 கடல் மைல் மிச்சப் படும் கப்பல்களுக்கு 41 மணி நேரம் மிச்சமாகும்.

1கோடியே 36 லட்ச ரூபாய் மிச்சப்படும்.

12-9-77-ல் மத்திய அரசுக்கு இதைப்பற்றி கடிதம் எழுதப்பட்டுள்ளது.

பின்னர் குழு அமைத்து அதன் முக்கியத்துவத்தை கூறியுள்ளோம்.

1979 ஜூனில் மத்திய போக்குவரத்து அமைச்சருக்கு முதல்வர் கடிதம் எழுதியுள்ளார்.

1980மார்ச்சில்பதில் வந்தது. இத்திட்டம் லாபகரமாக இருக்குமா? என மத்திய அரசு சந்தேகத்தை கிளப்பியது. உடனே விரிவான அறிக்கை அனுப்பினோம். 6-8-80ல் மத்திய அரசுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் கடிதம் எழுதினார். பயன்தரும் திட்டமா இதுஎனமத்திய அரசு கேட்டது. லட்சுமி நாராயணன் தலைமையில் கமிட்டி அமைக்கப்பட்டுள்ளது. இத்திட்டத்திற்காக அமைக்கப்பட்ட 12-வது கமிட்டி இது. இத்திட்டத்தில் அக்கறை எடுத்து குமரிஅனந்தன் கூட சில நிபுணர்களை அழைத்து வந்தார்.

கோவில்பிள்ளை என்னும் நிபுணரும் மத்திய அரசுக்கும் தமிழக அரசுக்கும் இத்திட்டத்தின் பலன் பற்றி அறிக்கை தந்துள்ளார்.

புதிய கமிட்டியிடம்

(2-ம் பக்கம் பார்க்க)

அமைச்சர் ராகவானந்தம் தவகல்

# பீடித் தொழிலாளர் குடியிருப்புக்கு 150 வீடுகள்

**சென்னை, ஏப். 5-பீடித் தொழிலாளர்கள் குடியிருப்புக்கென்று வடஆற்காடு மாவட்டம், சத்துவாச்சாரியில் 150 வீடுகள் ஒதுக்கப்பட்டுள்ளதாகஅமைச்சர் ராகவானந்தம் கூறினார்.**

சட்டமன்றத்தில் கேள்வி நேரத்தின்போது பதிலளிக்கையில் தொழிலாளர் நல அமைச்சர் ராகவானந்தம் கூறியதாவது:

மத்திய அரசின் தொழிலாளர் நல அமைச்சகத்தின் கீழ் இயங்கும் பீடித்தொழிலாளர் நலநிதி நிறுவனம் பீடித்தொழிலாளர் நலத் திட்டங்களை நிறைவேற்றும் பணியை மேற்கொண்டுள்ளது.

இந்த நிறுவனம் தமிழ்நாடு வீட்டுவசதி வாரியத்தால் வேலூருக்கு அருகில் சத்துவாச்சாரி என்னும் இடத்தில் பொருளாதாரத்தில் நலிவடைந்தபிரிவினருக்கான திட்டத்தின் கீழ் கட்டப்பட்ட 184 வீடுகளில் 150 வீடுகளைபீடித்தொழிலாளர்களின் குடியிருப்புக்காக ஒதுக்க வேண்டும் என்று வேண்டியது. அவ்வாறு 150 வீடுகள் பீடித் தொழிலாளர்களுக்கு ஒதுக்கப்பட்டிருக்கின்றன. பீடித் தொழிலாளர்களுக்காக வீடுகள் கட்டுவதற்கு அளிக்கப்படும் கடன் உதவியில் 1500 ரூபாய் மானியமாகவும் கடன் தொகையை 19 ஆண்டுத் தவணைகளிலும் கட்டவேண்டும்.

## கட்டிடத் தொழிலாளர்

கட்டிடத் தொழிலாளர்கள் சட்டத்தினை வரவேற்று 1980ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 15, 16 தேதிகளில் டெல்லியில் நடந்த தொழிலாளர் நல அமைச்சர்களின் நிலைக்குழுவின் முதல் கூட்டத்தில் தமிழக அரசு தனது கருத்தைத் தெரிவித்துள்ளது. கட்டிடம் மற்றும் கட்டுமானத் தொழில் மிகவும் கடினமானதும் நிலையில்லாததுமான ஒரு தொழிலாகும். ஆகவே அந்தத் தொழிலில்ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்புக்கு உத்தரவாதம் அளிப்பதற்கு ஏற்ப வழிமுறைஏற்படுத்த வேண்டும். இல்லையெனில் இந்த உரிமைகளைக் கோரும் தொழிலாளர்க்கு அடுத்தநாளே வேலை இழக்கும் நிலை ஏற்படக்கூடும். ஆகவே துறைமுகத் தொழிலாளர்களுக்குள்ள சலுகைகள்போன்றுஇந்த தொழிலாளர்களுக்கும் சலுகை வழங்கும் வகையில் துறைமுகத் தொழிலாளர்களுக்கு உள்ளதை போல கட்டிடம் கட்டுமானத் தொழிலாளர்களுக்கும் சட்டத்தில் வழிவகைகள் செய்யப்பட வேண்டும். கடைகள் மற்றும் நிறுவனங்கள் சட்டம், உணவுநிறுவனங்கள் சட்டம் ஆகியவைகளில் உள்ளது போன்ற புகார்களைக் கவனிப்பதற்கு என்று தனி அமைப்புக்களை ஏற்படுத்த வேண்டும். கட்டிடம் மற்றும் கட்டுமானத் தொழிலாளர்கள் தங்கள் குறைகளை நிவர்த்தி செய்யும்வகையில் இந்தத் தொழிலாளர்கள் நேரடியாகவேதொழிலாளர் நல உயர் அதிகாரிகளைச் சந்திப்பதற்கு ஏற்ற வகையில் சட்டத்தில் வழிவகை ஏற்படுத்த வேண்டும்.

பெரிய அணைக்கட்டும் இடங்களில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு வீடு கட்டிக் கொள்வதற்கு சட்டத்தில் வழிவகை செய்ய வேண்டும்.

## பரிந்துரைகளை அனுப்பி உள்ளோம்

சிறுவர்களைவேலைக்கு அமர்த்துவது குறித்து சர்வதேசத்தொழிலாளர் நிறுவனம் ஏற்கனவே செய்துள்ள பரிந்துரைக்கு ஏற்ப வர இருக்கும் சட்டத்தில் சிறுவர் என்பதாக விளக்கத்தில் குறிப்பிட்டுள்ள வயதுவரம்பை 16 ஆக உயர்த்த வேண்டும்.

பிற சமூகப் பாதுகாப்புச் சட்டங்கள் தொழிலாளர் இழப்பீட்டு சட்டம், தொழிலாளர் மாநிலஈட்டுறுதிச்சட்டம், 1952-ம் ஆண்டின்தொழிலாளர் வைப்பு நிதி மற்றும் பல்வகைச் சட்டம் ஆகியவற்றில் உள்ளது போல இதில் குறிப்பிட்டிருக்கும் ஊதிய வரம்பினை ஆயிரமாக நிர்ணயிக்க வேண்டும். இந்தப் பரிந்துரைகளை கருத்துக்களை மத்திய அரசுக்குநாம்அனுப்பியிருக்கிறோம்.

இவ்வாறு அமைச்சர் ராகவானந்தம் கூறினார்.

---

கார் நிதி வசூலா?

## பொய்செய்திக்கு கோவேந்தன் எம். எல். ஏ. மறுப்பு

தஞ்சை, ஏப். 5—தன்னைப்பற்றிஎதிரொலி பத்திரிகை அவதூறாக வெளியிட்டுள்ள பொய்ச் செய்தியை மறுத்து கழக சட்டமன்ற உறுப்பினர் எம்.ஆர். கோவேந்தன் விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

என்னைப்பற்றி எதிரொலி நாளிதழில் வந்துள்ள செய்தி உண்மைக்குப் புறம்பானதாகும். தொகுதி மக்களிடமிருந்தும், வியாபாரிகள், காண்ட்ராக்டர்கள் ஆகியோரிடமும் 'கார் நிதி' என்ற பெயரில் நான் நிதி வசூல் செய்ததாக அந்த பத்திரிகையில் வந்த செய்தி உண்மைக்கு மாறானதும், புறம்பானதுமாகும்.

பொய்ச் செய்தி வெளியிட்ட எதிரொலி ஆசிரியர் மீதும், நோட்டீஸ் அச்சிட்டவர்கள் மீதும் சட்டப்படி நடவடிக்கை எடுக்கப்படுகிறது.

இவ்வாறு பேராவூரணி கழக எம்.எல்.ஏ.. எம். ஆர். கோவேந்தன் கூறியுள்ளார்.

---

சென்னை நகரில்

# குடிதண்ணீர் தட்டுப்பாட்டை சமாளிக்க நடவடிக்கை

**சென்னை, ஏப், 5- சென்னை நகரில் குடிதண்ணீர்த் தட்டுப்பாட்டைச் சமாளிக்க முன் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுவருவதாக அமைச்சர் ராகவானந்தம் கூறினார்.**

சட்டசபையில் கொண்டுவரப்பட்டகவன ஈர்ப்புக்கு பதில் அளித்து அமைச்சர் ராகவானந்தம் கூறியதாவது:—

தற்போது சென்னையில் குடிநீர் தட்டுப்பாடு இல்லை.

இனி வரப்போகும் தட்டுப்பாட்டைச் சமாளிக்க முன் ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.

சென்னை நகருக்கு தற்போது தினசரி 245 மில்லியன் லிட்டர் தண்ணீர் தேவை ஆகும்.

இதில் சுமார் 20 மில்லியன் லிட்டர் நிலத்தடி நீர்.

சென்ற ஆண்டு இதே சமயம் வழங்கப்பட்டதைவிட இது 10 மில்லியன் அதிகம்.

எனவே எந்தப் பகுதியும் பாதிக்கப்படவில்லை. புகார்கள் உடனுக்குடன் கவனிக்கப்படுகின்றன.

தற்போது வழங்கப்படும் அளவில் ஏரிகளில் உள்ள தண்ணீர் வரும் ஆகஸ்ட் மாதம் வரை போதும்.

கோடையில் மழை பெய்யாவிட்டால் அக்டோபரில் மழை பெய்யும் வரை இந்த நீரையே வழங்கவேண்டும்.

அப்படி நேர்ந்தால் ஏரிகளில் இருந்து வழங்கப்படும் நீர் படிப்படியாகக் குறைக்கப்படும்.

இதை ஈடுசெய்ய நிலத்தடி நீரின் அளவு அதிகரிக்கப்படும்.

மேலும் மதகுக்கு கீழே உள்ள நீரை இறைத்து நகருக்குவழங்க திட்டமிடப் பட்டுள்ளது.

நீர் மட்டம் மதகுக்குக் கீழே குறைந்தால் ஆழ்துளைக் கிணறுகளில் இருந்து அதிக அளவு தண்ணீரை எடுத்து நகருக்கு வழங்கப்படும்.

## நடவடிக்கை

எனவே எந்த தட்டுப்பாடும் இல்லாமல் குடிநீர் வழங்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன.

தண்ணீர் தட்டுப்பாடு உள்ள இடங்களில் அதிக தொட்டிகளைப் பொருத்தி லாரிகள் மூலம் தண்ணீர் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இப் பணிகளைச் செய்ய ரூ. 72.46 லட்சத்தில் திட்டம் தயாரிக்கப்பட்டுள்ளது.

நகரைச் சுற்றியுள்ள பகுதிகளுக்கும் போதிய அளவு குடிநீர் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

இவ்வாறு அமைச்சர் ராகவானந்தம் கூறினார்.

---

## அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் தலைமையில் நடைபெறும் திருமணம்

நெல்லை, ஏப். 5—நெல்லை மாவட்ட குறும்பலாபேரி ஒன்றிய எம். ஜி. ஆர். மன்றப் பொருளாளர் எல். ரவிச்சந்திரனுக்கும், குறும்பலாபேரி டி. ஆர். சுப்பிரமணியத்தின் புதல்வி இந்திராவிற்கும் இம்மாதம் 11—ந் தேதி (ஞாயிற்றுக் கிழமை) காலை 10 மணிக்கு மேல் 12 மணிக்குள் அமைச்சர் ராஜேந்திரன் தலைமையில் திருமணம் நடைபெறுகிறது.

---

மகள் நடத்தையில் சந்தேகம் ஏற்பட

## கத்தியால் வெட்டிக் கொன்ற தந்தை

சென்னை, ஏப். 5—பெற்ற மகள் கண்டபடி ஊர் சுற்றினாள். தந்தைக்கு கோபம் ஏற்பட, கத்தியால் குத்திக் கொன்றான். இந்த சம்பவம் தண்டையார்பேட்டையில் நடந்துள்ளது.

தண்டையார் பேட்டையைச் சேர்ந்தவர் கணேசன். வயது 50. இவரது மகள் பன்னீர் செல்வம் வயது-30 ஆனவர். 4 தடவை மணம் ஆனவர். இதற்குப் பிறகும் கண்டபடி ஊர் சுற்றினாள்.

மகள் நடத்தையில் சந்தேகம் ஏற்பட்டது தந்தைக்கு; அதட்டிக் கேட்டார்.

மகளோ நீயார் கேட்க என்றாள். ஆத்திரம் கொண்ட தந்தை கத்தியால் மகளைக் குத்திக் கொன்றார்.

அந்த இடத்திலேயே மகள்மாண்டாள். தந்தை கத்தியோடு போலீசில் சரண் அடைந்தார்.

---

அமைச்சர்

## எஸ். டி. எஸ். நிகழ்ச்சிகள்

ஏப்ரல் 7-ந் தேதி புதன் இரவு திருச்சிபுறப்படுதல்.

8-ந் தேதி காலை 10 மணி சொக்கனாவூரில் பாமினி ஆற்றின் குறுக்கே கட்டப்படும் புதிய பாலத்திற்கு கால் கோள் விழா.

பகல் 12 மணி காடந்த குடிபுதியபோக்குவரத்துத் தடத்தை பார்வையிடல்.

மாலை 4 மணி பேராவூரணி வட்டாட்சியர் அலுவலகக் கட்டிடக் கால்கோள் விழா.

இரவு 8 மணி ஒரத்தநாடு பொதுமக்கள் வரவேற்பு.

9-ந் தேதி காலை 9 மணி நீடாமங்கலம் துணை வட்டத்தை வட்டமாக உயர்த்தும் விழா.

காலை 11மணி தஞ்சை நகர குடிநீர் அபிவிருத்தித் திட்டத்துவக்கவிழா.

மாலை 4 மணி- திருவையாறுஒன்றிய தன்னிறைவு திட்ட துவக்க விழா, வரகூர் ஆதிதிராவிடர் பள்ளிக்கட்டிடத் திறப்பு விழா, ஊராட்சி ஒன்றிய பள்ளிக் கட்டிடத் திறப்பு விழா பட்டாவழங்குதல், ஊராட்சி மருத்துவமனையைத் திறந்து வைத்தல்.

---

நாடாளுமன்றத்தில் கூச்சல் குழப்பம்.

## எதிர்க்கட்சியினர் வெளிநடப்பு

புதுடெல்லி, ஏப். 5—நாடாளுமன்றத்தில் இன்று கூச்சல் குழப்பம் ஏற்பட்டு பெரும்பகுதி எதிர்க்கட்சியினர் வெளிநடப்பு செய்தனர்.

பீகாரில் விவசாயத் தொழிலாளிகள் கொல்லப் பட்டது குறித்து அவசரமாக விவாதம் நடத்த வேண்டும் என்று எதிர்க்கட்சியினர் கோரினார்கள்.

ஆனால் சபாநாயகர் இதை ஏற்கவில்லை. அதைத் தொடர்ந்து கூச்சல் குழப்பம் ஏற்பட்டது. பெரும்பாலான எதிர்க்கட்சியினர் சபையில் இருந்து வெளிநடப்பு செய்தனர்.

---

## முத்துசாமி அறிவிப்பு...

(1-ம் பக்க தொடர்ச்சி)

சென்ற ஆண்டு நாங்கள் விளக்கங்களைக் கொடுத்துள்ளோம்.

இத்திட்டத்தை நிறைவேற்ற மத்திய அரசை வற்புறுத்தி வருகிறோம். நமது காலத்திற்குள் இத்திட்டத்தை நிறைவேற்றவேண்டும்என்றவிருப்பத்தில் மத்திய அரசை வற்புறுத்தி வருகிறோம்.

மத்திய அரசு எல்லா மாநிலங்களும் வளர்ச்சி அடைய வேண்டும் என விரும்புகிறது என்றே நாங்கள் நம்புகிறோம், இந்த ஆண்டுத் திட்டத்தில் இத்திட்டத்தையும் சேர்க்க வலியுறுத்தி வருகிறோம்.

இவ்வாறு அமைச்சர் முத்துசாமி கூறினார்.

---

800 ஏக்கர் நிலப்பரப்பில்

# இந்தியாவிலேயே பிரம்மாண்டமான வனவிலங்கு பூங்கா

**சென்னை, ஏப். 5- இந்தியாவிலேயே பிரம்மாண்டமானதாக 800 ஏக்கர் நிலப்பரப்பில் வண்டலூரில் திறந்த வெளி வன விலங்கு பூங்கா அமைக்கப்படும் என்று அமைச்சர் ஆர். எம் வீ. கூறினார்.**

சட்ட மேலவையில் கேள்வி ஒன்றுக்கு பதிலளிக்கையில் அமைச்சர் ஆர் எம். வீ. கூறியதாவது:

வண்டலூரில் விலங்கு காட்சி பூங்கா 3 கோடி ரூபாய் செலவில் திட்டமிடப்பட்டுள்ளது.

முதல் கட்டப் பணிக்காக ரூ. 105 லட்சம் அனுமதிக்கப்பட்டுள்ளது.

1981-82ல் ஜனவரி வரை 32.80 லட்சரூபாய் செலவிடப்பட்டுள்ளது. இத்திட்டப்பணிகள் 84-டிசம்பருக்குள் நிறைவு பெறும் என எதிர்பார்க்கப்படுகிறது.

திறந்த வெளி வன விலங்கு பூங்கா தற்போது ஐதராபாத், டெல்லியில் உள்ளன. வண்டலூரில் அமையவிருக்கும் திறந்த வெளி மிருகக்காட்சி சாலை இந்தியாவிலேயே சிறப்பான முறையில் அமைய உள்ளது.

## முதல்வர் உத்தரவு

முதலில் இது 350 ஏக்கரில் அமைய இருந்தது. பின்னர், முதல்வர் புரட்சித்தலைவர் அங்கு சென்று பார்த்து மேலும் குன்றுகளை ஒட்டியபகுதிகளையும்சேர்த்து 800ஏக்கர் பரப்பளவில் அமைக்க உத்தரவிட்டார்.

ஜனார்த்தனம்:—ஆப்பிரிக்காவில் உள்ள தான்சானியாவில் திறந்த வெளி மிருகக்காட்சி சாலை உள்ளது. அங்கு உறுப்பினர்கள் சென்று பார்த்து வரமுடியுமா? அதுபோன்ற திட்டங்களை செயல்படுத்த முடியுமா?

அமைச்சர் ஆர்.எம்.வீ: தான்சானியா கென்யா ஆகிய ஆசியநாடுகளில் தான், உலகப்புகழ்பெற்ற திறந்தவெளிமிருகக்காட்சி சாலைகள் உள்ளன. அவற்றை அதிகாரிகள் சென்று பார்க்க வேண்டும் என்று சொன்னபோது இது சம்பந்தப்பட்ட அமைச்சரும் சென்று பார்த்து வந்தால் நல்ல பயன் அளிக்கும் என சொல்லியிருக்கிறார்கள்.

உறுப்பினர்கள் உலக சுற்றுப் பயணம் செய்ய திட்டம் உள்ளது. அதில் இதையும் சேர்த்து அங்கே எல்லாம் பார்த்து விட்டு வந்து அறிக்கை தந்தால் பயனளிக்கும்

வண்டலூர் திறந்த வெளி மிருகக்காட்சி சாலையில் மனிதர்கள் தான் கூண்டுக்குள் இருப்பார்கள். மிருகங்கள் திறந்தவெளியில் நடமாடிக்கொண்டிருக்கும்.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினார்.

---

ஐகோர்ட் உத்தரவை ஏற்க வேண்டாம்:

## மக்கள்சபை சபாநாயகர் அறிவிப்பு

புதுடெல்லி, ஏப். 5—ஷெட்யூல்ட் வகுப்பினர், மற்றும்மலைஜாதிவகுப்பு நலக்குழுவின் தலைவருக்கு பாட்னா ஐகோர்ட், ஒருநோட்டீஸ் அனுப்பியுள்ளது.

ரிட் மனு ஒன்றை ஒட்டி கோர்ட் முன்னால் ஆஜராக வேண்டும் என அந்த நோட்டீசில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இது விஷயம் இன்று மக்கள் சபையில் கிளப்பப்பட்டது.

ஐகோர்ட்டின் நோட்டீசை ஏற்று கோர்ட்டில் ஆஜராக வேண்டியதில்லை என சபாநாயகர் பலராம் ஜாகர் தெரிவித்தார்.

இதை சபை உறுப்பினர்கள் கைதட்டி வரவேற்றனர்.

---

தொடர்ந்து

## 6 நாட்கள் சைக்கிள் ஓட்டி கழக தோழியர் சாதனை

சென்னை, ஏப். 5—கழகத்தோழியர்எஸ். ஆர். விஜயசாந்தி சென்னை 74-வது வட்டத்தில் கடந்த 6 நாட்களாக தொடர்ந்து சைக்கிள் ஓட்டி வருகிறார்.

இன்று மாலை 8 மணிக்கு தனது சைக்கிள் ஓட்டத்தை முடிக்கிறார்.

இதற்காக விழா ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

கூடல் கோவிந்தன் தலைமை வகிக்கிறார். எம். ஆறுமுகம் முன்னிலை வகிக்க, இ. மதுசூதனன் விழாவைத் துவக்கி வைக்கிறார்.

வ. கோதண்டராமன், பி.எல். ராதாகிருஷ்ணன் ஆ. செல்வராஜ் ஆகியோர் பேசுகின்றனர். பி. கே. அர்ஜுனன் நன்றி கூறுகிறார்.

---

கடன் பாக்கி வசூல்:

# விவசாயிகளிடம் தி. மு. க. அரசின் கெடுபிடி வசூல்

## புதுவை ஜனதா கடும் கண்டனம்

**பாண்டிச்சேரி, ஏப். 5- விவசாயிகளிடம் தி. மு. க. அரசு கெடுபிடி வசூலில் ஈடுபடுவதை உடனே நிறுத்த வேண்டும் என புதுவை மாநில ஜனதாக் கட்சி கோரியுள்ளது.**

புதுவைமாநில ஜனதாக் கட்சியின் நிர்வாகக்குழுக் கூட்டம் நடந்தது.

இக்கூட்டத்திற்கு பிறகு புதுவை மாநில ஜனதாக் கட்சியின் தலைவர் கே. ஆர். சுப்பிரமணிய படையாச்சி நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது:—

புதுவை மாநிலத்தில் திமுக இந்திராகாங்கிரஸ் கூட்டணி அரசு விவசாயிகளிடம் கடன் பாக்கிக்காககெடுபிடி வசூலை நடத்தி வருகிறது. இதை அரசு உடனடியாக நிறுத்த வேண்டும் என, தீர்மானம் நிறைவேற்றப்பட்டுள்ளது.

## வழக்குகள் வாபஸ்

கடந்த ஜனவரி 19-ந்தேதி நடந்த பொது வேலை நிறுத்தத்தை ஒட்டி அரசு ஊழியர்கள் சிலர் வேலை நீக்கம்செய்யப்பட்டுள்ளனர். பலர் மீது வழக்குகளும் போடப்பட்டுள்ளன. இவற்றை அரசு உடனடியாக வாபஸ் பெறவேண்டும் எனவும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

புதுவை மாநிலத்தில் உடனடியாக உள்ளாட்சித்துறை தேர்தலை நடத்த வேண்டும் எனவும் மற்றொரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

இவ்வாறு சுப்பிரமணிய படையாச்சி கூறினார்.

---

142-வது வட்டத்தில்

## அமைச்சர் பண்ருட்டி பேசுகிறார்

சென்னை, ஏப். 5—சென்னை 142-வது வட்டம் சைதைத் தொகுதி மேட்டுப்பாளையம், தெற்குக் கவரைத் தெருவில் வருகிற 7-ந் தேதி (புதன்) மாலை 7மணிக்கு கழகப் பொதுக்கூட்டம் நடக்கிறது.

எம். எஸ். லக்குமணன் தலைமை வகிக்கிறார். கே. எம். சாமியான் எம். ருத்திரகோட்டி முன்னிலை வகிக்க எம். ஆர். கோவிந்தராசன் பி. முருகேசன் வரவேற்புரையாற்றுகின்றனர்.

அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன், வலம்புரி ஜான், நவரசம் ஜி. கே. எஸ். எம். எல். ஏ. இ. மதுசூதனன், சைதை துரைசாமி மே. சொ. மகாலிங்கம், ஏ. துரை, எம். மார்ட்டின், நீரோட்டம் ரமேஷ், டி.தேவராஜ், இரா.முனுசாமி, சொ. கடும்பாடி ஏ. கேசவன், என். நடராசன், என். எஸ். மோகன், கே. கோபால், எம். எம். ராமு, எம். எஸ். விஸ்வநாதன், மற்றும் பலர் பேசுகின்றனர்.

---

## சட்டசபை 7-ந் தேதி முடிகிறது

சென்னை, ஏப். 5—தமிழக சட்டசபையின் பட்ஜெட் கூட்டம் 7-ந் தேதியுடன் முடிவடைகிறது.

சட்டசபைக்கு நாளை (6-ந்தேதி) விடுமுறையாகும்.

சட்டசபையின் அடுத்த கூட்டத்தொடர் ஜூலை மாதம் நடக்கும் என சபாநாயகர் கூறினார். தேதி பின்னர் அறிவிக்கப்படும்.

---

சென்னை ரப்பர்தொழிற்சாலையில்

## பாய்லர் வெடித்து 2 பேர் சாவு

சென்னை, ஏப். 5—சென்னை திருவொற்றியூரிலுள்ள எம்.ஆர்.எப். ரப்பர் தொழிற்சாலையில் திடீரென பாய்லர் ஒன்று வெடித்தது.

இதனால்பாபு, லூகாஸ் என்ற இரு தொழிலாளர்கள் படுகாயம் அடைந்து ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லும் வழியில் இறந்துவிட்டனர்.

இவ்விபத்துக் குறித்து திருவொற்றியூர் போலீஸ் இன்ஸ்பெக்டர் மனோகரன் விசாரணை நடத்தி வருகிறார்.

---

## தியாகிகள் பென்சன்: நாவலர் விளக்கம்

சென்னை, ஏப். 5—சட்டமன்றத்தில் கேள்வி ஒன்றிற்குப் பதில் அளித்து நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் கூறியதாவது:—

தமிழக அரசிடமிருந்து தியாகிகள் பென்சன் பெறும் தியாகிகளின் வருமான உச்சவரம்பை அரசு அண்மையில் தான் மேலும் தளர்த்தியுள்ளது. இப்போது ஆண்டு வருமானம் 5 ஆயிரம் ரூபாய் என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. அதனை அடியோடு ரத்துச் செய்யும் செயற்குறிப்பு ஏதும் இப்போதைக்கு அரசின் பரிசிலனையில் இல்லை. தமிழக அரசின் பென்சன் பெறுவதற்கு மூன்றுவார காலம் சிறையில் இருந்தால் போதும் என்று அறிவித்திருக்கிறோம். இவ்வாறு நாவலர் கூறினார்.

---

## திருப்பத்தூரில் சந்தன எண்ணெய் ஆலை

சென்னை, ஏப். 5—சட்ட மேலவையில் தமிழக காடுகளில் கிடைக்கும் சந்தனக் கட்டைகளைப் பயன்படுத்தி சந்தனத் தைலம் தயாரிக்கும் திட்டம் குறித்த கேள்விக்கு அமைச்சர் ஆர். எம். வீ. பதிலளித்தார்.

அப்போது அமைச்சர் ஆர். எம். வீ. கூறியதாவது:

வடாற்காடு மாவட்டம் திருப்பத்தூரில் ரூ. 50 லட்சம் செலவில் சந்தன எண்ணெய்த் தொழிற்சாலை அமையவிருக்கிறது.

இதற்காக அனுமதி பெறுவதில் காலதாமதம் ஏற்பட்டு வருகிறது.

சந்தனமர ஏற்றுமதிக்கு மத்திய அரசு தடைவிதித்துள்ளதால் கடந்த 2 ஆண்டுகளில் 2, 3 கோடி ரூபாய் நட்டம் ஏற்பட்டுள்ளது.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினார்.

---

தலைமைக்கழக அறிக்கை எண் 26-82

## மராட்டிய மாநில கழகத் தோழர்கள் கவனத்திற்கு...

மராட்டிய மாநில கழக அமைப்புகளின் பணிகளை ஒழுங்குபடுத்தவும், தீவிரப்படுத்தவும் **மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்கள்** அனுமதியுடன் கீழ்க்கண்டவர்கள் அடங்கிய குழு அடுத்த அறிவிப்பு வரும் வரை தற்காலிகமாக நிர்வகிக்கும் என அறிவிக்கப்படுகிறது.

1. எஸ். டி. முகுந்தன்
2. இரா. சி. பூபாலன்
3. எஸ். எஸ். மணி
4. கலீபா, எம்.ஏ.சி.
5. வ. கிருஷ்ணன்

(உறுப்பினர்கள்)

இந்தக்குழுவிற்கு தற்காலிகப் பொறுப்பாளராக திரு. முகுந்தன் பணியாற்றுவார்.

கழக, மன்றத் தோழர்கள் அனைவரும் மேற்கண்ட குழுவினருடன் தொடர்பு கொண்டு ஒத்துழைப்புத்தந்து கழகப்பணிகளை ஊக்குவிக்க வேண்டுகிறேன்.

ப. உ. சண்முகம்
பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

சென்னை—14
5-4-1982

ஐஸ்அவுஸ்

காவல் நிலையத்தில்

## நடந்தது என்ன? பொய் செய்திக்கு மறுப்பு

சென்னை, ஏப். 5— சென்னை ஐஸ் அவுஸ் காவல் நிலையத்தில் கடந்த மாதம் 31-ந் தேதி ஒரு கோஷ்டி தகராறு காரணமாக 25 பேருடன் சென்று காவல் நிலையத்தில் கலாட்டா செய்ததாகவும், இது சம்பந்தமாகப் போலீசார் என்னைத்தேடி வருகிறார்கள் என்றும் சில பத்திரிகைகளில் வெளிவந்த செய்தி முற்றிலும் உண்மைக்குப் புறம்பானதாகும் என்று 95-வது வட்டக் கழக உதவிச்செயலாளர் ஜி. செல்வராஜ் ஒரு அறிக்கையில் தெரிவித்துள்ளார்.

மேலும் இப்படிப்பட்ட சம்பவம் ஒன்று நடைபெறவே இல்லை என்றும் அது சம்பந்தமாக என்னைப் போலீசார் தேடிவருகிறார்கள் என்று வெளிவந்த செய்தி முற்றிலும் உண்மைக்குப் புறம்பானதாகும் என்றும் அவர் தன் அறிக்கையில் தெரிவித்துள்ளார்.

குமரி மாவட்ட கலவரத்தில் பாதிக்கப்பட்டவர்களுக்கு

# வீடுகட்ட கடன்: 10 கிலோ அரிசி-சேலை வேட்டி, பண உதவி

### அரசின் சார்பில் நிவாரணப்பணி தீவிரம்

**நாகர்கோவில், ஏப். 5- குமரி மாவட்ட கலவரத்தில் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரணப்பணிகள் அரசின் சார்பில் தீவிரப்படுத்தப்பட்டுள்ளது. பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்கு 10 கிலோ அரிசி, 5 லிட்டர் மண் எண்ணெய், ஒரு வேட்டி-சேலை, ரூ. 50 ரொக்கம் கொடுக்கப்படும்.**

கலவரத்தில் வீடு சேதம் அடைந்தவர்கட்கு வீட்டை சீரமைத்துக் கொள்ள கடன் உதவியும் அரசின்சார்பில் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

கலவரத்தில் பாதிக்கப்பட்டவர்களுக்கு வழங்க இருக்கும் நிவாரணப்பணிகள் விவரங்களை மாவட்ட ஆட்சித்தலைவர் பிரானேஷ் அறிவித்துள்ளார்.

கலவரத்தில் பலருடைய வீடுகள் சேதமாகி உள்ளன. இப்படி பாதிக்கப்பட்டவர்கள் வீடுகளை சீரமைத்துக் கொள்ள கடன்உதவியை அரசு செய்யும்.

முழுக்க பாதிப்பு இருந்தால் ரூ. 500-ம், ஓரளவு பாதிக்கப்பட்டு இருந்தால் ரூ. 250-ம் கடனாக அரசு வழங்கும்.

இது தவிர கலவரத்தால் பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்கு 10 கிலோ அரிசி, 5 லிட்டர் மண்எண்ணெய், ஒரு வேட்டி, ஒரு சேலை ரூ. 50 ரொக்கமும் வழங்க முடிவு செய்யப்பட்டுள்ளதாக மாவட்ட ஆட்சித்தலைவர் பிரானேஷ் கூறினார்.

### அமைதி நிலவுகிறது

கலவரம் தொடர்பாக குமரி மாவட்டத்தில் 674 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர். இதில் 160 பேர் குறிப்பிட்ட குற்றங்களுக்காக கைது செய்யப்பட்டுள்ளனர். 255 பேர் தடையை மீறியதற்காகவும்; 259 பேர் முன் கூட்டி எடுக்கப்பட்ட நடவடிக்கையாகவும் கைது செய்யப்பட்டுள்ளனர் என்றும் குமரி மாவட்ட போலீஸ் சூப்ரெண்டு பரமவீர்சிங் கூறினார்.

240 வழக்குகள் பதிவு செய்யப்பட்டுள்ளதாகவும் அவர் கூறினார்.

கலவரத்திற்கு மூலகாரணம் ஒலிபெருக்கி என்று சொல்லப்படுவதால் எல்லா ஒலிபெருக்கி அனுமதியும் ரத்து செய்யப்பட்டுள்ளதாகவும் பரமவீர்சிங் கூறினார்.

குமரி மாவட்டம் முழுவதும் தொடர்ந்து அமைதி நிலவுவதாகவும் அவர் கூறினார்.

உ. பி. யில்

## 15 நாளில் 49 கொள்ளையர் சுட்டு சாவு

லக்னோ, ஏப். 5— உத்திரப்பிரதேச மாநிலத்தில் கடந்த மார்ச் மாதத்தில் 17-ந் தேதியிலிருந்து 31ந்தேதி வரை கொள்ளையர்களுடன் போலீசார் 95 மோதல்களில் ஈடுபட்டனர்.

இதில் 49 கொள்ளையர்கள் சுட்டுக்கொல்லப்பட்டனர். 256 பேர்கைது செய்யப்பட்டனர். 221 துப்பாக்கிகள் பறிமுதல் செய்யப்பட்டன.

## மருதுபாண்டியர் போக்குவரத்துக் கழகம் அமைப்பு

மதுரை, ஏப். 5— மருதுபாண்டியர் போக்குவரத்துக் கழகம் என்ற புதிய அமைப்பு அமைக்கப்பட்டுள்ளது.

புதிய அமைப்பு காரைக்குடியைத் தலைநகராகக் கொண்டு இயங்கும்.

புதுக்கோட்டை மாவட்டம், முகவை மாவட்டத்தில் சில பகுதி மக்களுக்கு இந்தப் புதிய அமைப்பு சேவை செய்யும்.

பாண்டியன் போக்குவரத்துக் கழகத்திலிருந்து இந்தப் புதிய கழகத்திற்கு 350 பேருந்துகள் செல்கின்றன.

# ஆந்திரா, கர்நாடகா தேர்தல் எப்போது? ஒரு வாரத்தில் முடிவு

**புதுடெல்லி, ஏப். 5-ஆந்திரத்திலும், கர்நாடகத்திலும் சட்டமன்றத் தேர்தலை நடத்துவதா இல்லையா என்று இன்னும் ஒரு வார காலத்தில் இந்திரா காங்கிரஸ் தலைமை முடிவு செய்யும்.**

இந்த இரண்டு மாநிலங்களிலும் இன்னும் ஒன்பது மாதங்கள் கழித்துத்தான் சட்டமன்றத் தேர்தல் நடைபெற வேண்டும். என்றாலும் இந்தமாநிலங்களிலும் வருகிற மே மாதமே தேர்தல் நடத்துவது பற்றி காங்கிரஸ் தலைமை தீவிரமாகச் சிந்தித்துக் கொண்டிருக்கிறது.

மேற்கு வங்கம், கேரளம், அரியானா, இமாசலப் பிரதேசம், ஆகிய 4 மாநிலங்களிலும் மே மாதம் தேர்தல்நடைபெறுகிறது. இந்தத் தேர்தலோடு ஆந்திரம், கர்நாடக மாநிலங்களிலும் சட்டமன்றத் தேர்தல் நடத்தினால், ஒரு குட்டி பொதுத்தேர்தல் போல் ஆகிவிடும். அப்போது எதிர்க்கட்சிகள் இந்த இரண்டு மாநிலங்களிலும் முனைந்து தேர்தல் பணி செய்ய முடியாது.

மேலும் ஆந்திரம், கர்நாடகம் ஆகிய மாநிலங்களில் எதிர்க்கட்சிகளிடையே இன்னும் ஒரு உடன்பாடு ஏற்படவில்லை.

இன்னும் ஒன்பதுமாதம் கழித்து ஆந்திரத்தில் தேர்தல் என்றால் அதற்குள் என்.டி.ராமாராவின் தெலுங்குதேச இயக்கம் பலம்பெற்றுவிடும். எனவே ஒன்பது மாதங்களுக்கு முன்னரே வருகிற மே மாதமே ஆந்திரத்திலும் கர்நாடகத்திலும் சட்டமன்றத்தேர்தலை நடத்தி முடித்துவிடலாம் என்று இந்திரா காங்கிரஸ் தலைவர்களில் ஒரு பகுதியினர் கருதுகின்றனர்.

வருகிற மே மாதம் நடைபெறும் சட்டமன்றத் தேர்தலில் மேற்கு வங்கத்தில் இந்திரா காங்கிரஸ் வெற்றி பெறும் வாய்ப்பு இல்லை. கேரளத்தில் இந்திரா காங்கிரஸ் வெற்றி வாய்ப்பு எப்படி இருக்கும் என்று இப்போது சொல்லும் நிலையில் இல்லை. எனவே இந்த மாநிலங்களில் ஏற்படும் பாதிப்பை கர்நாடகம், ஆந்திரத்தில் வெற்றி பெற்றாவது சரிக்கட்டிக்கொள்ள வேண்டும் என்று இ. காங்கிரஸ் கட்சித் தலைவர்களில் ஒரு பகுதியினர் கருதுகின்றனர்.

### சென்னாரெட்டி

ஆந்திர மாநில முதல்வரையும் மாநில இந்திரா காங்கிரஸ் கட்சித்தலைவரையும் அழைத்த இந்திரா காங்கிரஸ் தலைமை இப்போது முன்னாள் முதல்வர்களான அஞ்சையாவையும் சென்னாரெட்டியையும் அழைத்திருக்கிறது.

சென்னாரெட்டி இன்று டெல்லிக்குப் பயணமாகிறார்; ஆனால் அஞ்சையா இதுவரை டெல்லி செல்லும் நிலையில் இல்லை. உடல் நிலை காரணமாக அவர் டெல்லி செல்லவில்லை என்று அவருடையநெருங்கிய ஆதரவாளர்கள் கூறினர்.

## தனியார் கூட்டில் காகித ஆலை

சென்னை, ஏப். 5— சட்டசபையில் கேள்வி நேரத்தில் பதிலளிக்கையில் அமைச்சர் திருநாவுக்கரசு கூறியதாவது:—

தென் ஆற்காடு மாவட்டம் பண்ருட்டி தாலுகா வடக்குத்து கிராமத்தில் தொழில்வளர்ச்சிக் கழகம் தனியார் கூட்டில் கெங்கப்பா காகித ஆலை என்ற பெயரில் டி. ஜி. கிருஷ்ணமூர்த்தி என்பவருடன் கூட்டுத்துறையில் நிறுவப்பட்டு இயங்கி வருகிறது.

இதன் முதலீடு ரூ. 54 லட்சம் ஆகும். இந்த ஆலையில் ஆண்டுக்கு 10 ஆயிரம் டன் காகிதம் உற்பத்திசெய்யப்படும்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

## திருச்சி தாலுகா இரண்டாக பிரிப்பு

சென்னை, ஏப். 5— சட்ட மன்றத்தில் கழக உறுப்பினர்கள் எம்.சின்னசாமி, ஆர். சவுந்தரராசன் ஆகியோரின் கேள்விக்கு பதிலளிக்கையில் வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். கூறியதாவது:—

திருச்சி மாவட்டத்தில் திருச்சி தாலுகாவை இரண்டாக பிரிக்கும் செயற்குறிப்பு அரசின் பரிசீலனையில் உள்ளது. அப்படிப் பிரிக்கப்படும்போது திருவரங்கத்தை தலைமையாகக் கொண்டு புதிய தாலுகா அமையும்.

இவ்வாறு அமைச்சர் எஸ். டி. எஸ். கூறினார்.

ஸ்டேட் பாங்க் அதிகாரிகள் மாநாடு:

# தியாகம் செய்ய முன் வருக: அதிகாரிகட்கு பண்ருட்டி கோரிக்கை

**சென்னை, ஏப். 5- அதிகாரிகள் தங்களது சுகங்களில் சிலவற்றை நாட்டிற்காகத் தியாகம் செய்ய முன்வரவேண்டும் என்று அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.**

சென்னை ஜெயம் கல்யாண மண்டபத்தில் பாரத ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் மாநாடு நடந்தது.

வரவேற்பு உரையில் சங்கத்தின் தமிழக அமைப்புச் செயலாளர் விண்ட்ஸே அதிகாரிகள் சங்கம் தோன்றிய விதம் பற்றியும் அதிகாரிகளின் சங்கம் என்ற வகையிலே அவர்கள் பட்ட அல்லல்கள் பற்றியும் குறிப்பிட்டார்.

சங்கத்தின் தலைவர் சண்முகசுந்தரம் தனது தலைமை உரையில் நமது நாட்டு உற்பத்தித் திறனையும், தொழிலாளர்களின் நிலைமையையும் மின்னல் வேகத்தில் செல்லும் ஜப்பான் நாட்டுடன் ஒப்பிட்டார். அவர், நிர்வாகம் எங்கெங்கு தன்னுடைய ஊழியர்களைக் கவனிக்கும் கடமையிலிருந்து தவறியதோ அந்த இடங்களிலெல்லாம் அதிகாரிகள் சங்கம் என்றமுறையிலே தாங்கள் எவ்வாறு அதிகாரிகளுக்கு உதவுகிறார்கள் என்பதை குறிப்பிடும் பொழுது சமீபத்தில் இச்சங்கம் துவக்கிய மேல் உயர்நிலைப் பள்ளிகளைப் பற்றியும் தொழிற்சங்க மேம்பாட்டுக்காக அவர்கள் நடத்தும் பயிற்சிப் பள்ளி பற்றியும் உறுப்பினர்களுக்கு உதவுவதற்காக ஏற்படுத்தப் பட்டிருக்கும் ''நிதி உதவிக் குழு'' பற்றியும்-குறிப்பிட்டார்.

மின் துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பாங்குகளின் நிலை தேசியமயமாக்கப்பட்டதற்கு முன்னும் பின்னும் பற்றிப் பேசினார்' சமுதாயத்தில்ஏற்பட்டிருக்கக் கூடிய விழிப்புணர்ச்சி மற்றும்அனைவரும் ஏழை எளியவரும் வங்கிகளிடம் நிதி உதவிபெற முடியும் என்ற மாற்றம் தேசியமயமாக்கப்பட்ட பின்னர் தான் ஏற்பட்டவை என்பதை வலியுறுத்தினார்.

அதிகாரிகள் தங்களது சுகங்களில் சிலவற்றை நாட்டின் முன்னேற்றத்திற்காக தியாகம் செய்யத்தான் வேண்டும் என்றும் அந்த நிலையிலே அவர்கள் கிராமங்களுக்குச் சென்று சேவை செய்வது இன்றியமையாதது ஆகும் என்றார். அவ்வாறு செய்து வருவதற்காக பாரதிய வங்கி அதிகாரிகளைப் பாராட்டிப் பேசினார்.

### தியாகம் செய்க

தொழிற் சங்கங்கள் அவர்களுடைய பழக்கங்களையும் காலப்போக்கிற்கு ஏற்ப மாற்றிக் கொள்வதுபோல நிர்வாகமும் மாற்றிக் கொண்டிருக்க வேண்டும். மாறாக அவர்கள் மாறவில்லை என்று அமைச்சர் கூறினார்.

சில நிர்வாகங்கள் எந்த ஒரு காரியத்திற்கும் சம்பந்தப்பட்ட தொழிற் சங்கங்களைத்தான் கலந்து ஆலோசிக்கும் என்றும் கூறினார். பாதுகாபபின்மை என்ற ஒரு எண்ணம் தன் ஊழியர்களிடையே இருக்கக் கூடாது என்ற நிலைமையினை நிர்வாகம் கொண்டு வந்தால் ஊழியர்கள் உற்பத்தித் திறன் அதிகரிக்கும் என்றார்.

சென்னை வட்டார பாரத ஸ்டேட் வங்கியின் தலைமைப் பொதுமேலாளர் பானி தமது உரையில் சங்கம் உருவாவதற்கு முன் இருந்த நிலைமையையும் அதற்குப்பின் இருந்த நிலைமையையும் அதன் பயனாய் அவர்கள் பெற்றிருக்கும் நன்மைகளையும் கூறிப்பாராட்டி பேசினார். இன்னும் நிறைந்த ஓய்வூதியத்தையும், மருத்துவ வசதிகளையும் பெற சங்கம் முயற்சிக்க வேண்டும் என்று விரும்பினார். அதிகாரிகள் சங்கத்தின் திறமைமிகு செயல்களுக்காக பாங்கின் சென்னை வட்டாரத் தலைமை மண்டல மேலாளர் இராசாராமன் சங்கத்தைப் பாராட்டிப் பேசினார்.

## பாசன வாரியம்: அரசு ஆலோசனை

சென்னை, ஏப், 5— குளங்கள், ஏரிகள், அணைக்கட்டுகள் ஆகியவைகளில் பாசன வசதிகளை ஒழுங்குபடுத்த பாசன வாரியம் என்ற தனிப்பட்ட அமைப்பு ஏற்படுத்தலாமா என்பது குறித்து அரசு ஆய்வு செய்து வருகிறது என்று கழகஉறுப்பினர்தாமரைக்கனிகேள்விக்குப் பதிலளிக்கையில் அமைச்சர் ராஜாமுகமது சட்டசபையில் தெரிவித்தார்.

சிறந்த தரம் - அற்புதமான கலர்கள்:

உலக மார்க்கெட்டில் சிறந்து விளங்கும்

# தமிழக கைத்தறி காதி துணிகள்: மத்திய அமைச்சர் பாராட்டு

**கும்பகோணம், ஏப். 5- சிறந்த தரத்தோடு, அற்புதமான கலர்களில் தயாரிக்கப்படும், தமிழக காதி மற்றும் கைத்தறித் துணிகள் உலக மார்க்கெட்டில் சிறந்து விளங்குவதாக மத்திய அமைச்சர் சிவராஜ் பாட்டீல் தெரிவித்துள்ளார்.**

தஞ்சை மாவட்டம் கும்பகோணத்திற்கு வந்த மத்திய வர்த்தகத்துறை அமைச்சர் சிவராஜ் பாட்டீல் இதுகுறித்து கூறியதாவது:—

உலக மார்க்கெட்டில் தமிழகத்தில் தயாரிக்கப்பட்ட கைத்தறி மற்றும் காதித் துணிகளுக்கும் நல்ல வரவேற்புள்ளது.

இவ்வாறு சிறந்துவிளங்குவதற்கு அவற்றின் தரமும், அற்புதமான கலர் வகைகளுமே காரணமாகும். இதற்காக சம்பந்தப்பட்டவர்களுக்கு பாராட்டுத் தெரிவித்துக்கொள்கிறேன்.

மில் துணிகளை ஏற்றுமதி செய்வதில் சில இடையூறுகள் உள்ளன.

### ரஷ்யாவிற்கு ஏற்றுமதி

கைத்தறித் துணி ஏற்றுமதியில் எந்தப் பிரச்சினையும் இல்லை.

ரஷ்யாவிற்கும் மற்ற நாடுகளுக்கும் கைத்தறித் துணி ஏற்றுமதியை அதிகரிப்பது குறித்து மத்திய வர்த்தக அமைச்சகம் பரிசீலித்து வருகிறது.

பாகிஸ்தான் சிறையில்

கொடுமை:

## 6 இந்தியர்கள் கண் பார்வை இழந்தனர்

இஸ்லாமாபாத். ஏப்.5- பாகிஸ்தான் சிறையில் 10 இந்தியர்கள் கொடுமைப்படுத்தப்பட்டு வருகின்றனர். இதில் 6 பேர்கள் கண் பார்வை இழந்துள்ளனர்.

நீண்டகாலமாக இவர்கள் சிறையில் இருந்துவருவதால் கண் பார்வை இழப்பு மட்டுமல்ல, இவர்களது மனநிலையும் பாதிக்கப்பட்டுள்ளது.

கண் பார்வை இழந்த 6 பேர்களில் ஒரு பெண்மணியும் உள்ளார்.

பாகிஸ்தான் சிறையில் நீண்டகாலமாககொடுமைகளை அனுபவித்துவரும் இவர்கள் 10 பேர்களும் மனிதாபிமான அடிப்படையில் விடுதலைகோரி மனு கொடுத்துள்ளனர்.

அமைச்சர் திருநாவுக்கரசு அறிவிப்பு

# புதிய தொழில்கள் துவங்குவோருக்கு சலுகைகள் உண்டு

**சென்னை, ஏப். 5-தமிழகத்தில் புதிய தொழில் துவங்குபவர்களுக்கு எல்லாவித சலுகைகளையும் தமிழக அரசு அளிக்கும் என்று தொழில்துறை அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.**

அமைச்சர் திருநாவுக்கரசு ''புதியதோர் உலகம் செய்வோம்'' என்ற தலைப்பில் ரேடியோவில் பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:-

1977-ம் ஆண்டு கழகம் ஆட்சிக்கு வந்தபிறகு தமிழகம் தொழில் துறையில் வளர்ச்சி அடைந்து வருகிறது.

தொழிற்சாலைகள் சட்டத்தின் கீழ் 1977ல் பதிவு செய்யப்பட்ட தொழிற்சாலைகளின் எண்ணிக்கை 8 ஆயிரமாக இருந்தது. அது 1981-ல் 10 ஆயிரமாகஉயர்ந்து இருக்கிறது. அதேபோல் நிரந்தரபதிவு பெற்ற சிறுதொழில்களின் எண்ணிக்கையும் 4 ஆண்டுகளில் ஏறத்தாழ 100 சதவீதம் உயர்ந்துள்ளது.

இது தவிர தமிழகத்தில் சர்க்கரை ஆலைகள், சிமெண்டு ஆலைகள், மின்சாரத் தொழிற்சாலைகள், ரசாயனத் தொழிற்சாலைகள் ஆகியவை தொடங்க வேகமாகநடவடிக்கைஎடுக்கப்பட்டு வருகிறது.

மேலும் ரூபாய் 35 கோடி செலவில் புதிய நூற்பாலைகள் ஆரம்பிக்கப்பட உள்ளன. ரூ. 190 கோடி செலவில் திருச்சி மாவட்டத்தில் காகிதத் தொழிற்சாலை

(6-ம் பத்தி பார்க்க)

(8-ம் பத்தி தொடர்ச்சி)

கட்டப்பட்டு வருகிறது.

தஞ்சை மாவட்டம் வேதாரண்யம் பகுதியில் எண்ணைக்கிணறுகள் கண்டு பிடிக்கப்பட்டு இருப்பது நாட்டு மக்கள் அனைவருக்கும் மகிழ்ச்சி தரக்கூடிய செய்தியாகும்.

மாநில அரசு எவ்வளவு பெருமுயற்சி எடுத்துக்கொண்டாலும் மத்திய அரசின் தொழில் முதலீடும், மத்திய அரசு பொதுத்துறை நிறுவனங்களும் அதிகம் அமைந்தால்தான் அதிக அளவில் தொழில்கள் உருவாக்க முடியும்.

அரசு தொழிற்சாலைகளுக்கு மட்டும் அல்லாமல், தனியார் தொழிற்சாலைகளுக்கும் பல்வேறு அடிப்படை வசதிகள் ஏற்படுத்திக்கொடுக்கப்படும்.

### உயர்மட்ட ஆலோசனை குழு

அதற்காக தொழில் அதிபர்கள், நிபுணர்கள் அடங்கிய உயர்மட்ட ஆலோசனைக்குழுமாநில அளவில் அமைக்கப்படும்.

தமிழகத்தில் தொழில் வளர்ச்சியை மேலும் அதிகரிக்க தொழில் அதிபர்களும் தொழில் நுட்ப நிபுணர்களும் முன்வர வேண்டும். அப்போதுதான் வேலை இல்லாத் திண்டாட்டம் ஒழிந்து உற்பத்தி உயரும்; ஏழை எளிய மக்கள்பயன் அடைவார்கள்.

அவ்வாறுபுதுத் தொழில் துவங்க முன்வருபவர்களுக்கு எல்லாவித வசதிகளையும் எளிதில்கிடைக்கச் செய்து தமிழகஅரசுஒத்துழைப்பையும் தரும்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு பேசினார்.

# கர்நாடகாவில் பி. யு. சி. கேள்வித் தாள் அவுட்: தேர்வு ஒத்திவைக்கப்பட்டது

பெங்களூர், ஏப். 5— கர்நாடக மாநிலத்தில் புகுமுக வகுப்பு கேள்வித் தாள்கள் அவுட்டாகிவிட்டதால் தேர்வு ஒத்திவைக்கப்பட்டுள்ளது.

கர்நாடக மாநிலத்தில் புகுமுக வகுப்புக்களுக்கான தேர்வு நேற்று துவங்கியது.

ஆனால் தேர்வு துவங்கு முன்பே கேள்வித்தாள்கள் வெளியாகிவிட்டது.

பெல்லாரி மாவட்டத்தில் உள்ள சிரகுப்பா நகரில் இந்தக் கேள்வித் தாள்கள் வெளியானதாகக் கூறப்படுகிறது.

சனிக்கிழமை அன்று இந்தக் கேள்வித்தாள்கள் வெளியாகிவிட்டன. 4 மாணவர்கள் ஒரு தனியார் கல்லூரி வாட்ச்மேனை அடித்துப் போட்டுவிட்டு உள்ளே புகுந்தனர்.

உள்ளே நுழைந்த இந்த மாணவர்கள் ஒரு கேள்வித்தாள் பண்டலை அபேஸ் செய்து சென்றதாகக் கூறப்படுகிறது.

இந்த பண்டலில் 15 பாடங்களுக்கான கேள்வித் தாள்கள் இருந்தன.

மாணவர்கள் இந்தக் கேள்வித் தாள்களைத் திருடிச்சென்றது குறித்து போலீசில் புகார் கொடுக்கப்பட்டுள்ளது.

இதனால் கர்நாடக மாநில புகுமுக வகுப்புக்கான இயக்குநர் தேர்தல் தள்ளி வைத்து இருப்பதாக அறிவித்துள்ளார்.

தேர்வு எழுத வந்த மாணவர்கள் திருப்பி அனுப்பப்பட்டனர்.

தேர்தல் நடக்கும் தேதி கல்லூரிகள் மூலமாக பின்னர் அறிவிக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

Published by K.Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road. Madras-600 029.

Editor:
E. PARASURAMAN

தமிழ்நாடு அரசு
எழுதுபொருள்மற்றும்
அச்சுத்துறை
இயக்ககம்,
816, அண்ணா சாலை, சென்னை-600 002.

எண். இயக் 48-9568-பி5-82 நாள்: 24-3-82

## ஒப்பந்தப்புள்ளி அறிவிப்பு

தமிழ்நாடு ஆளுநர் அவர்களின் சார்பாக, கீழ்க் காணும் பொருட்கள் வழங்குவதற்கு அரக்கு முத்திரை யிட்ட ஒப்பந்தப்புள்ளிகள், கீழே குறிப்பிட்டுள்ள விவரப்படி பதிவு அஞ்சல்மூலம் மட்டும் பெற்றுக் கொள்ளப்படும்.

| SI No. | Description of Stores | Quantity | Due Date |
|---|---|---|---|
| 1. | Brook Motors Limited Huddersfield England GRYPHON Class E. No. Approx (3) Connections * HZ (50) Type (TEFC) HP (.75 HP) F.L. Amps (2.5) (550 W) Per terminals 1.45) Voltage 220 — 250 * Speed (1420) 380 — 440 Y.F.L. | 1 No | 28—4—82 |
| 2. | Air Compressors which can develop air at 7 KG-CM 2 pressure and 0.4 KG - CM 2 in the Vacuum Side used for automatic Printing machines of RAI. Size with motor. | 10 Nos | 29—4—82 |

மேற்கொண்டு விவரங்களுக்கு உதவிப்பணி மேலாளர் (கொள்முதல்) எழுது பொருள் மற்றும் அச்சுத்துறை இயக்ககம், 816. அண்ணா சாலை, சென்னை—600 002 என்ற முகவரிக்கு எழுதவும்.

லால் ராணா செய்லோ, ஐ. ஏ. எஸ்.,
இயக்குநர்.

சென்னை : 600 002
நாள் : 24-3-82

DIPR-10762-62-40-X



எம்.எல்.ஏ.க்கள் நீச்சல் போட்டி:

# அதிகப் போட்டிகளில் வின்சென்ட் வெற்றி

சென்னை, ஏப். 5— எம். எல். ஏ.க்களுக்கிடையே நடந்த நீச்சல் போட்டிகளில் கலந்து கொண்ட கழக எம். எல். ஏ. நாஞ்சில் வின்சென்ட் அதிகப்போட்டிகளில் வெற்றி பெற்றார்.

சட்டமன்ற, மேலவை உறுப்பினர்களுக்குப் பல்வேறு போட்டிகள் நடந்து வருவது தெரிந்ததே.

நீச்சல் போட்டியில் வின்சென்ட் 20 புள்ளியும் விஜயபாலன் 15 புள்ளியும், ஜேப்பியார் 3 புள்ளியும் வெள்ளைச்சாமி 4 புள்ளியும் காடுவெட்டி கண்ணப்பன் 3 புள்ளியும் பெற்றனர்.

100 மீட்டர் மார்பு நீச்சல் போட்டியிலும், மல்லாந்து செல்லும் 100 மீட்டர் போட்டியிலும் 50 மீட்டர் நீச்சல் போட்டியிலும் நாஞ்சில் வின்சென்ட் முதலாவதாக வெற்றி பெற்றார்.

100 மீட்டர் சாதாரண நீச்சல் போட்டியில் விஜயபாலன் முதல் பரிசு பெற்றார்.

6 நீச்சல் போட்டிகள் நடந்தன. 5 போட்டிகளில் நாஞ்சில் வின்சென்ட் கலந்துகொண்டார். அதிகப் போட்டிகளில் அவர் வெற்றி பெற்றார்.

நீச்சல் போட்டி நடந்த இடத்தில் இருந்த விளையாட்டு பயிற்சித்துறை இயக்குநர் யு. எஸ். நடராசன் நீச்சல் போட்டி சாம்பியன் என்று நாஞ்சில் வின்சென்ட்டைக் கூறினார். அங்கிருந்த அமைச்சர் ராகவானந்தம் கழக எம். எல்.ஏ. வின்சென்ட்டைப் பாராட்டினார்.

# மணிப்பூரில் ரூ. 6 கோடி பணம் கையாடல்: 22 அதிகாரிகள் கைது

## இ.காங்கிரஸ் ஆட்சியை டிஸ்மிஸ் செய்ய கவர்னரிடம் மனு

இம்பால், ஏப். 5- மணிப்பூர் மாநிலத்தில் 6 கோடி ரூபாய் அரசு பணத்தைக் கையாடல் செய்ததாக 22 அரசு அதிகாரிகள் கைது செய்யப்பட்டுள்ளனர்.

மணிப்பூர் மாநிலத்தில் சுகாதாரத்துறை மற்றும் கல்வித்துறை உட்பட பல்வேறு துறைகளிலும் அரசு பணத்தில் 6 கோடிரூபாய் கையாடல் நடந்ததாகத் தெரியவந்துள்ளது.

இதையடுத்து அரசு விசாரணை நடத்தி வருகிறது.

இது தொடர்பாக 8 டாக்டர்கள் உட்பட மொத்தம் 22 அதிகாரிகள் கைது செய்யப்பட்டுள்ளனர்.

இதற்கிடையில், மணிப்பூர் மக்கள் கட்சியைச் சேர்ந்த 4 சட்டசபை உறுப்பினர்கள் கவர்னர் எஸ்.எம்.எச்.பர்னேயைச் சந்தித்து மாநிலத்தில் மிகப்பெரிய ஊழல் மோசடி நடந்துள்ளதால் மாநிலத்தில் ஆட்சிப் பொறுப்பில் உள்ள இந்திரா காங்கிரஸ் ஆட்சியை டிஸ்மிஸ்செய்ய வேண்டும் என்ற கோரிக்கை அடங்கிய மனுவை அளித்தனர்.

இந்த ஆட்சி நீடித்தால் கையாடல்குறித்த வழக்கு முறையாகநடக்காது என கவர்னரிடம் தெரிவிக்கப் பட்டதாக மக்கள் கட்சித் தலைவரும், இந்தக் கையாடலை சட்டசபையில் அம்பலப்படுத்திய வருமான எல். மனோபி கூறினார்,

இது குறித்து சி.பி.ஐ. விசாரணை நடத்துவது பற்றி ஆலோசிப்பதாக கவர்னர் தங்களிடம் உறுதி கூறியதாகவும் அவர் மேலும் தெரிவித்தார்.

அகில இந்திய வானொலி
சென்னை

## திருத்தம்

சென்னை, அகில இந்திய வானொலியில் ஜூனியர் கிரோடு நிலைய கலைஞர் அறிவிப்பாளர் (தெலுங்கு) பதவிக்கு விண்ணப்பங்கள் விற்பனைக்கான இறுதித் தேதியும், விண்ணப்பங்கள் பெற்றுக் கொள்வதற்கான இறுதி தேதியும் கீழ்க்கண்டவாறு நீடிக்கப்பட்டுள்ளது.

I விண்ணப்பம் விற்பனை செய்வதற்கான இறுதித் தேதி 20-4-82

II சென்னை அகில இந்திய வானொலியில் விண்ணப்பங்கள் பெற்றுக் கொள்வதற்கான இறுதித் தேதி 30-4-82.

davp-690 (424) 81

ரூ. 190 கோடி செலவில் உருவாகும்

# புகளூர் காகித ஆலை வெற்றிகரமாக இயங்கும்: அமைச்சர் உறுதி

சென்னை, ஏப். 5- புகளூரில் ரூபாய் 190 கோடி மூல தனத்தில் அமையவிருக்கும் காகித ஆலை தனது உற்பத்தியில் வெற்றிநடைபோட்டு செயல்படும் என்று தொழிலமைச்சர் திருநாவுக்கரசு உறுதியுடன் நம்பிக்கை தெரிவித்தார்.

சட்ட மேலவையில் தமிழ்நாட்டில் அமையவிருக்கும் காகித ஆலை பற்றிய கேள்விகளுக்கும் அதைத் தொடர்ந்து எழுப்பப்பட்ட துணை கேள்விகளுக்கும் தொழில் துறை அமைச்சர் திருநாவுக்கரசு பதில் அளித்தார்.

அவர் கூறியதாவது:—

திருச்சி மாவட்டம் புகளூரில் ரூ. 190 கோடி மூலதனத்துடன் அமையவிருக்கும் காகிதஆலைக்கு எரிபொருள் தட்டுப்பாடு எந்தவிதத்திலும் ஏற்படாது என்றே கருதுகிறேன். ஆலைக்குத் தேவைப்படும் நிலக்கரியைப் பொறுத்தவரை மத்திய அரசு நிலக்கரியைக் கொடுக்க உறுதி அளித்திருக்கிறது.

இன்னும் இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் தான் இந்த ஆலைத் தனது உற்பத்தியைத் தொடங்கும்.

## நல்லமுறையில் செயல்படும்

பத்திரிகைக் காகித உற்பத்தியில் புகளூர் ஆலை வெற்றிகரமாக செயல்படும் என்பதை உறுதியுடன் தெரிவித்துக்கொள்கிறேன். நல்ல முறையில் இயங்கும் என்பதை நாம் அனைவரும் நம்புவோம். புகளூர் ஆலைக்கு ஆண்டுக்கு 4 லட்சத்து 28 ஆயிரம் டன் கரும்புச் சக்கை தேவைப்படும். இந்தத் தேவையைசேலம்காவேரி புகளூர் ஆகிய இடங்களில் உள்ள சர்க்கரை ஆலைகள் மற்றும் ''டெக்கான் சுகர்ஸ்'', 'சக்தி சுகர்ஸ்' ஆகிய ஆலைகளும் பூர்த்தி செய்யும்.

மதுராந்தகம் அருகே அமையவிருக்கும் சிறிய காகித ஆலைக்குத் தேவைப்படும் கரும்புச் சக்கைகள் சுமார் 21 ஆயிரம் டன் ஆகும். மதுராந்தகத்தில் உள்ள கூட்டுறவு சர்க்கரை ஆலை, ஆம்பூர், கள்ளக்குறிச்சி முதலிய இடங்களில் உள்ள சர்க்கரை ஆலைகள் பூர்த்திசெய்துவிடும்.

டாக்டர்ஜனார்த்தனம்: மாவட்டங்களில் கிடைக்கும் உப்பு போன்ற பொருள்களைப் பயன்படுத்தி கிராமங்களில் தொழிற்சாலைகள் அமைக்கப்படுமா?

அமைச்சர் திருநாவுக்கரசு:— மாவட்டங்களில் கிடைக்கும் மூலப்பொருள்களை பயன்படுத்தி அந்தந்தப் பகுதிகளுக்குத் தகுந்தவாறு சிறிய தொழிற்சாலைகள் அமைக்கவும் தமிழகஅரசு நடவடிக்கை மேற்கொண்டிருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

குடிசைமாற்று வாரிய

## புதிய குடியிருப்பு திறப்புவிழா

சென்னை, ஏப். 5— சென்னை சேப்பாக்கம் தொகுதி நாவலர்நெடுஞ்செழியன் நகர் திட்டப் பகுதியில் தமிழ்நாடு குடிசை மாற்று வாரியத்தால் கட்டப்பட்டுள்ள புதுக் குடியிருப்புக்கள் திறப்பு விழா இன்று (திங்கட்கிழமை) மாலை அமைச்சர் ராகவானந்தம் தலைமையில் சேப்பாக்கம் பகுதிச்செயலாளர் மு. அன்புத்தம்பி முன்னிலையில் நடைபெறுகிறது. புதிய குடியிருப்புகளை அமைச்சர் பொன்னையன் திறந்து வைப்பார். இவ்விழாவிற்கு குடிசை மாற்று வாரியத்தலைவர் டி.கே. கபாலி வரவேற்புரை நிகழ்த்துகிறார். மற்றும் தொழிற்சங்க பிரிவுச் செயலாளர் வை. பெருமாள், வி.பி. பாலசுப்பிரமணியன் எம். எல். ஏ, ரகுமான்கான் எம்.எல்.ஏ. ஆகியோர் கலந்து கொண்டு சிறப்புரை யாற்றுகின்றார். ஜெ. பாலன் நன்றி கூறுகிறார்,

## கழகக் கூட்டம்

சென்னை, ஏப். 5— சென்னை 54-வது வட்டம் எடைப்பாளையம், வால்டாக்ஸ் சாலையில் இன்று திங்கட்கிழமை இரவு 7 மணிக்கு கழகப் பொதுக்கூட்டம் நடக்கிறது.

எம்.மோகன் தலைமை வகிக்கிறார். பி.கே. கேசவன், ஜெ. குமார் முன்னிலையில் நடக்கும் இந்தக் கூட்டத்தில் காடுவெட்டிகண்ணப்பன் எம்.எல்.சி., டாக்டர்சமரசம் எம்.எல்.ஏ., திருவை அண்ணாமலை, இ. மதுசூதனன், இரா. துரைராஜன், ஏ. என். குப்புசாமி, கே.எஸ். ராமன், கு. மாணிக்கம், எம்.பி., இருசப்பன், கண்ணப்ப ராஜேந்திரன், தரங்கை கண்ணன், பெரம்பூர் சாலமன், பி. செல்வம் ஜி.கே. சாமி மற்றும்பலர் பேசுகின்றனர்.

தகவல் தொடர்பு அமைச்சகம்
(W P C பிரிவு)

## பொது அறிவிப்பு

கம்பியில்லாத் தந்தி சாதனங்கள் (Wireless Equipment) வைத்திருக்க லைசென்ஸ் அவசியமானதாகும்

ரேடியோ பேஜிங் முறைகள், வாக்கி—டாக்கி செட்டுகள் மற்றும் PLCC போன்ற கம்பியில்லாத் தந்தி சாதனங்களை உற்பத்தி செய்யும் ஒரு சில நிறுவனங்கள், தாங்கள் உற்பத்தி செய்யும் மேற்படி ஒயர்லெஸ் சாதனங்களை வைத்திருக்க உபயோகிக்க லைசென்ஸ் தேவையில்லை என்பது போன்ற தவறான வகையில் விளம்பரப்படுத்துவதாக இந்த அமைச்சகத்திற்கு தெரிய வந்துள்ளது. இது தவறானதாகும். இதன் மூலம் பொது மக்கள் எச்சரிக்கப்படுவது என்னவென்றால், மத்திய அரசினால் அளிக்கப்படும் தகுதி வாய்ந்த லைசென்ஸ் இன்றி, ஒயர்லெஸ் சாதனங்கள் வைத்திருப்பதோ அல்லது அவற்றை உபயோகிப்பதோ 1885வது இந்திய டெலிகிராப்ஸ் சட்டத்தின்படி குற்றமாகும். எனவே ரேடியோ பெட்டி அல்லது டி. வி. செட் போன்ற வீட்டு சாதனங்கள் நீங்கலாக—மேற்கண்டவாறு ஏதாவது ஒயர்லெஸ் சாதனங்களைவாங்குவதற்கு முன்னதாக வாங்க விரும்புபவர்கள் இந்த அமைச்சகத்திற்கு எழுதி மேற்கண்ட சாதனத்தை உபயோகப்படுத்துவதற்கான லைசென்சை பெற்றுக் கொள்ள வேண்டும்.

davp-713-20-81

# திருமண மண்டப கட்டிடப் பணித் துவக்க விழா

மற்றும்

# பாரதியார் நூற்றாண்டு நினைவு அங்காடி திறப்பு விழா

கத்திவாக்கம் நகராட்சி நகரியம், செங்கல்பட்டு மாவட்டம்.

நாள் : 6-4-82 செவ்வாய்க்கிழமை மாலை 6-25 மணி
இடம்: கத்திவாக்கம் நகரிய அலுவலகம் அருகில்

விழாத் தலைவர் :
திரு. H. J. ராமச்சந்திரன் I.A.S.
செங்கல்பட்டு மாவட்ட ஆட்சித் தலைவர்

முன்னிலை :
திரு. குமரி அனந்தன் M.A.
சட்டமன்ற உறுப்பினர், திருவொற்றியூர்

திருமண மண்டப கட்டிடப் பணியைத் துவக்கி வைத்தும், பாரதியார் நூற்றாண்டு நினைவு அங்காடியைத் திறந்துவைத்தும்

சிறப்புரை : மாண்புமிகு உள்ளாட்சித்துறை அமைச்சர்
திரு. P. குழந்தைவேலு M. A., B. L.

அனைவரும் வருக! வருக!!

-விழாக் குழுவினர்